*Second Five-Year Plan works for Madurai district*

* 423 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்கள் பற்றி மதுரை ஜில்லாவுக்கென வெளியான புத்தகத்தில் உள்ளபடி மதுரை ஜில்லாவில் வேலைகள் நடைபெற்றுள்ளதா ?

(ஆ) பெரும்பாலான வேலைகள் நடைபெறாததின் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) The Madurai District Plan prepared by the Collector of Madurai at the time of formulation of the Second Five-Year Plan represents the requirements of the district as envisaged by the Local Planning Committees and the District Planning Board. It includes schemes estimated to cost Rs. 39·39 crores. These schemes are to be implemented in the current and the subsequent Plans. Schemes costing about Rs. 20 crores are under implementation in the district during the current Plan period.

SRI N. R. THIAGARAJAN : 38 கோடி ரூபாய் அளவுக்குமேல் திட்டங்கள் தயாரித்திருந்தாலும், 20 கோடி ரூபாய் செலவழிக்கப்படுவதாகக் கூறப்படுகிறது. மதுரை ஜில்லாவில் நான் நான்கு ஆண்டுகளாகச் சுற்றிப் பார்த்து வந்திருக்கிறேன். அப்பொழுது என்ன திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டுமென்று திட்டமிடப்பட்டதோ, அதில் ஒன்று கூட நடந்ததாக எனக்குத் தெரியவில்லை. ஆகவே, நிறைவேற்றப்படாத அந்தத் திட்டங்களை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது நிறைவேற்றுவதற்குச் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மதுரை ஜில்லாவில் என்ன என்ன தேவைகள் இருக்கின்றன என்பதை மனதில் வைத்துக்கொண்டு, அந்தத் தேவைகள் ஓரளவு பூர்த்தி அடைவதற்கு எந்த எந்தத் திட்டங்களை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சிபார்சு செய்து, சுமார் 40 கோடி ரூபாய் அளவுக்குத் திட்டங்கள் தயார் செய்யப்பட்டன. ஆனால், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் உருவாகும்போது, அதிலே இருக்கும் நிதி வசதியை அடிப்படையாக வைத்துக்கொண்டு எந்த எந்தத் திட்டங்களை நிறைவேற்றமுடியும் என்று பார்த்து 20 கோடி ரூபாய் அளவுக்கு நிறைவேற்றப்படுகிறது. ஸ்டேட் லெவல் ஸ்கீமுக்கு 18·67 கோடி ரூபாயும், டிஸ்ட்ரிக்ட் லெவல் ஸ்கீமுக்கு 1·51 கோடி ரூபாயும், வில்லேஜ் லெவல் அண்டு பஞ்சாயத்து லெவல் ஸ்கீமுக்கு 12·77 கோடி ரூபாயும், முனிசிபாலிடிகளிலே 6·44 கோடி ரூபாயும், ஆக மொத்தம் 39·39 கோடி ரூபாய் அளவுக்குச் சிபார்சு செய்யப்பட்டது. ஆனால் பூராவும் எடுத்துக்கொள்ள முடியாததனால், முன்னே நான் சொன்னபடி, 20 கோடி ரூபாய் அளவுக்கு எடுத்து முடிவு அடைய இருக்கின்றன.

*Small-scale Industries*

* 424 Q.—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அமெரிக்க அபிவிருத்திக் கடன் நிதி ஸ்தாபனம் இந்தியாவிற்கு அளிக்கும் சிறு தொழில் ஸ்தாபன உதவியிலிருந்து நம் மாநிலத்திற்கு எந்தெந்த தொழிலுக்கு, எவ்வளவு, எப்போது கிடைக்கும் ?

(ஆ) இந்த உதவித் தொகையை அரசாங்கம் எப்படி எந்த அடிப்படையில் வினியோகம் செய்ய உத்தேசம் ?

5th September 1960]

THE HON. SRI R. VENKATARAMAN : Credit to the extent of 10 million dollars has been made available by the Development Loan Fund to the National Small Industries Corporation, Limited, New Delhi, which is a company started by the Government of India. The Corporation has decided to utilize the credit for the operation of the scheme, for the supply of machines under the Hire-purchase Scheme and under the Bank Guarantee Scheme for the development of small-scale industries. No Statewise and industrywise allocation has been made out of the credit of 10 million dollars.

SRI A. VEDARATHNAM : அமெரிக்கா உதவியிலிருந்து நம்முடைய மாநிலத்திற்கு ஏதாவது உதவி கிடைத்திருக்கிறதா ? அப்படியானால், அந்த உதவியை எந்த எந்தத் தொழிலில் ஈடுபடுத்த அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதில் அனுஷ்டிக்கின்ற முறை என்னவென்றால், என்ன என்ன சிறு தொழில்களுக்கு நமக்கு வெளிநாட்டிலிருந்து இயந்திரங்கள் வேண்டுமென்று முதலில் கணக்குப் போட்டு, அந்த இயந்திரங்களை வாங்குவதற்கு நாம் அந்தக் கார்ப்பரேஷனிடத்திலே அனுமதி வாங்கவேண்டும். அந்த விதமாக நாம் இதுவரையிலும் நாஷனல் இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பரேஷனிலிருந்து 1959–60-வது வருஷத்திற்கு மாத்திரம் 10,04,563 ரூபாய் அளவுக்குச் சிறு இயந்திரங்களை வாங்கியிருக்கிறோம். இந்த வருஷத்திற்குத் திட்டங்கள் தயாராகிக் கொண்டிருக்கின்றன.

*Tele-communication Engineering*

* 425 Q.—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the degree course in Tele-communication Engineering in the College of Engineering, Guindy, has been abolished from the year 1960–61;

(*b*) if so, the reasons therefor and the steps taken to re-employ the staff thrown out of employment;

(*c*) if not, the number of students taking up this course for the past three years and the number and status of staff employed in this department; and

(*d*) whether there was a proposal to introduce Tele-communication as a subject for post-graduate study; and if so, the details of the proposal and the reason for not giving effect to it till now?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir. The Tele-communication Course has been ordered to be suspended, temporarily, during 1960–61.

(*b*) Sufficient number of students has not opted for this course. It is proposed to retain the existing surplus staff for the present and to utilize their services in the other branches where there may be vacancies.

(*c*) Does not arise.

(*d*) No, Sir.